நாமாது முற்செய்த தவமென்கொ லென்பார்
நாமாதி தன்றன்னை நாவார வாழ்த்திப்
பாமாலை சாத்தும் பதம்பெற்று நின்றாள்
பாரீரி தார்பெற்ற பதமென்று பகர்வார். (௧௯)

பொன்மேனி கண்டார்கட் டன்மேனி யாகப்
புரக்கும்பி ரானென்றல் பொய்யன்று மெய்யே
யென்மேனி பொன்மேனி யாய்விட்ட தென்பா
ரிப்பேறு பெறுவார்க ளியாரென் றிசைப்பார். (உ0)

வேறு.

முடியாதப தத்தை யளிக்கு
மொழியாமொழி யாளிப தத்தே
கடியார்மலர் தூய்த்தொழு கிற்பார்
கையென்னத வஞ்செய்த தென்பார். (உ௧)

மரணப்பிற வித்துயர் தீர
மருந்தென்று வணங்கி வணங்கிச்
சரணப்பது மந்தலை வைப்பார்
தலையென்னத வஞ்செய்த தென்பார். (உ௨)

புரணப்பரி பூரணபோதப்
பொன்மேனி புலப்பட நல்கும்
கருணைக்கழல் கண்களில் வைப்பார்
கண்ணென்னத வஞ்செய்த தென்பார். (உ௩)

பேயாகிய வெம்மையு மாளும்
பித்தாவென வொத்தன் பேசி
வாயாரவும் வாழ்த்திப் பிசைப்பார்
வாக்கென்ன தவஞ்செய்த தென்பார். (௨௪)

காயாலய மேவியி ருந்துங்
கண்ணுமன் மறைந்துறை யுங்கண்
மாயாவெளி வந்தனை யென்பார்
மன்றுவெளி வந்தனை யென்பார். (௨௫)

நீராயுரு வார்துதி செய்யா
நிற்பாருனை யிப்படி காணில்
வாராத பதம்பெற வேண்டேம்
வரமீதென வாழ்த்தியி ரப்பார். (௨௬)

வேறு.

தேனனைய சொல்லியரு மாதவரு மிங்ஙனிரு
சேவடிந யந்துசெலவே
வானனைய வன்குமரை மாநகர்வ லஞ்செய்திறை
மாளிகை புகுந்தருளியே. (௨௭)

வடிவுகொடு வந்தவருள் கருதுதொறு மன்பரிரு
மலர்விழி வழங்குபுனலே
படிவதுவு மன்றிமிகு பரிமளசு கந்தமுறு
புனலிடை படிந்தருளியே. (௨௮)

இனியவடி யார்துதியெ னமுதுசெவி யுண்ணவிழி
யிவர்களுயி ருண்ணு மிறையோன்
கனியவள வாயுலக வமுதொழிய வின்சுவைகள்
கமழடிசி லுண்டருளியே. (உகூ)

மருடரு பவஞ்சிதைய வந்தனைசெய் பூசுரரு
மாதவரும் வேதமெனுமா
புருடனும் விவேகனொடு பொன்மலர்கள் சிந்தியடி
போற்றிட விருந்தபொழுதே. (௩0) ஆ. ருஉஎ.

---

(ஒற்று.)

நியதியுரைத்தல்.

தீர்த்தனைனை யாளிதிரு முன்பிறை பதங்கடுதி
செய்துபணி செய்பவளையு
மேற்றநினை யாரையு மியம்பென விவேகனதி
காரியை யியம்புமவனே. (க)

வேறு.

சுருதி யாயிரமு கங்கள் கொண்டிறைவ
தூய நின்கழல்கள் பாடுமே
மிருதி யாகமபு ராண கீதையிதி
கார்ச மப்பரிசின் மேவுமே. (உ

அமையு மாறறியு முனிவர் பேணுவது
நின்னை யேயயலி லாமையால்

சமய மாறுமொரு நின்னை யேயிறைவ
தாழு வந்தபடி தாழ்வதே. (௩)

நாளு நாளுநினை யஞ்சி வானமிசை ஞாயி றுதிவரு கின்ற
வெக், கோளு நாளுமுன நீவி தித்தவழி யோட டப்பர்குலை
யாழலே. (௪)

உழலு மாருதமு மிறைவ நின்றுவலி
செய்வ துன்வலியை யுட்கொடே
யழலும் யாவுமடி வதும டைத்தபணி
யென்று நின்னடி களஞ்சியே. (௫)

வருண னின்றுபணி செய்ய நின்னைமிக
வஞ்சி நெஞ்சினிடை வள்ளனின்
சரண பங்கயமி லாரை யேகொடுமை
செய்வ துந்தரும ராசனே. (௬)

யத்தி யெண்டிசையி லமரர் யாவருநின்
னேவல் செய்யுமவ ரின்பமா
மூர்த்தி நின்பணிய லாது வேறிலது
மூவ ருஞ்செய்துமு டிப்பதே. (௭)

விண்ணு ளாருமவர் கோவு மற்றுமுள
வேவு, வேறுலகினி யாவரு

மன்னு மாருநினை யன்றி யாவரை
வணங்கு வார்கருணை வள்ளலே. (அ)

வேறு.

ஏகநின்கழ லேவல்செ யாதவ ரில்லையே
மோக னின்கழ லேவல்செ யானென் மூர்த்தியே.

ஆ. ௩௩.

---

தூது.

மோகனெனு மைந்தனை மேவல்செய வென்றுநல
மொழியவல நியாயமகனைப்
போகவென வங்கவனை யெய்தியவ னோடுமருள்
செய்தவைபொ ருந்தும்வகையே. (க)

உன்னில்வலி மிக்கவர்கண் மோகவர சேயொரு
சுராசுரரு மில்லையுலகத்
தென்னினு நினக்குறுதி யாவதுவி ருப்பினெடி
யான்மொழிவ தற்கிசைவதே. (உ)

வேறு.

அழியாத நீதி யறியாத மோக
னவன்வந்து சேர்வ னெனவே
வழியாறி னென்றின் மதியான நீதி
மகன்முன்னி யேவன் மொழிவான். (ங)

வேறு.

மங்கையொரு பாகனொடு மாலயனு மாலயமு
மாதவர்கண் மன்னுவனமுங்
கங்கைநதி பொன்னிநதி கன்னிநதி யின்னுமுள
நன்னதிக ளின்கரைகளும்

இயமநிய மாதியெனு மெண்வகை யியோகமு
*முயற்சியொ டியற்றியிடர்தீர்
சயமுனிவ ரானவர்கள் சாந்திமுத லாரொடு
தனித்தனியி ருக்குமிடமும்.

பாதமிறை யோனருளி லேயகில வுயிருருவு
பழையவறி வாவதெனுநால்
வேதமிறை யாகமம் புராணமிதி காசமுடன்
மிருதிகள்வி ளங்குமிடனும்.

ஆரதர மானகலை சாரதர மானவை
தொகுத்துமுனி சொல்லியமகா
பாரதமும் வேறுமுள வேதநெறி மாதவர்
பகர்ந்தனவ ழங்குபதியும்.

சாதனச துட்டய நலந்தனை யலம்பெற
வடைந்தவர்க டன்னையறியும்

---

* அருத்தியொடு எனவும் பாடம்.

வேதன விருப்பினர் பொருந்துமிடம் யாவையும்
விவேகனர சாருமிடமே. (௮)

என்னுடைய நாதனருள் செய்கவிவை விட்டிதர
பூமிபுகின் மோர்கவரசே!
புன்னுடைய வாவியுண தாகுமுரை செய்ததி
னுணர்ந்துகொ ளுனக்குறுதியே. (௯)

காதிவரு மாறுசம யக்கடவு ளாகுமிறை
கண்ணுதல்மு குந்தனயனென்
றோதிவரு தேவர்களு மாகமிவை யாவர்க
ளும்பனவ னென்பதுணரே. (௰)

உதித்தகுல னென்றிறைவு னுக்கிருதி றந்தவரு
மொக்குமென வோர்பொழுதுநீ
மதித்தமொழி யோர்குல மறம்பெருகு மைவரு
மறம்பெருகு நூற்றுவருமே. (௧௧)

வேறு.

குவளை யாம்பலர விந்த முற்பல குலங்களை.கருச லங்களை
தவளை யாமைசட முதலை நீரரவு தன்னையுந்தருவ தன்னி
லே. (௧௨)
தெருளு றும்படி விசும்பின் மீதுலவு திங்க ளுயிறுங்கோ.
ள்களை, மிருளு றும்படிய தன்க ணேயுலவி ராகு கேது
வுங் கோள்களை. (௧௩)

கறுத்த தார்யினு நிகர்க்க நின்றிலது
கோகி லத்திகுெடு காகம்வெண்
சிறத்த தேனுமட வன்ன முங்குருகு
சிரில் வசழினுநி கர்க்குமே. (கச)

மலைய முங்கயிலை யிமைய மந்தரமு மலைக ளேபிறவு மலைக ளே, மலையின் மங்கைகலை திருவ ருந்ததியு மகளி ரேபி றரு மகளிரே. (கரு)

வேறு.

கங்கை காவிரியு நதிகளே காளி யாறுகளு நதிகளே
மங்கை பாகனுங் குரவனே மற்று ளார்களுங் குரவரே.

நந்த கோபன்மகன் மனுடனே நாட்டி னுள்ளவருமனுட ரே, யிந்து சேகரனு மீசனே யேனை வானவரு மீசரே.

வேறு.

சொல்லே மறையும் பிறவுஞ் சொலலே
சுடர்மா மணியுஞ் சுரனுர் மலையுங்
கல்லே யிறைபே னும்வே கனையுங்
கருதா நினையுங் கருதிப் படியே. (கஅ)

கீழ்மே னுளதோ விறைவர்க் கெனினீ
யவருக் கிலகே டறுசெய் யமலர்த்
தாண்மேல் விழுமா தவர்மே லவர்கீ
ழுவரா குவர்தா ளில்விழா தவரே. (கசு)

நீயும் பெருமா ளூடிபே றுதியே
னெடுவா ளுலகங் குளுநின் னரசே
யாயும் பருநின் னைவணங் குவார்நீ
யறிகின் றிலேயெங் கைதக ராருளே. (௨௰)

வேறு.

கான்று நின்றவ ளியம்பவற லென்னவிழியா
வேக மேனவல்செய்வி வேகனர சாளவரவே
நன்று நன்றினிவி வேகனல நம்பனைகவனன்
றுநெ னென்றிவன்மொ ழிந்தவன மக்கெதிரியே.

மோகன் யாமெனது தந்தைமன னிந்தவுலக
மூன்று மென்றனர சாக்கினன்மொ ழிந்தவிறை
வேனக ருமவனி னென்னிவிக விற்குவலியார் [யோ
யாவ ரென்றினி யியம்புகவெ னக்கிசையவே. (௨௨

வேறு.

ஓதியொ ருத்தனல்க வதனத்தை நல்க
வரைமார்பொ ருத்தனுடலிற்
பாதியொ ருத்தனல்க மகளிர்க் கொருத்த
படைமாரன் யாவர்படையே. (௨௩)

அரியர னென்றுகூறு மறிவோ ரரக்க
ரசுரேச ருர்களமர்செய்
தெரியெழு விக்கர்கோப னெனதேவ லின்றி
யெவரேசுஞ் செய்வதிசையே. (௨௪)

சிறியனு மாயிரக்க நெடுமீரால் சிறந்த
பரமீச ஞனசிவனே
வறியனு மாயிரக்க வடலோப னின்று
வலிசெய்வ தார்சொல்வழியே. (உரு)

வேறு.

அதயின் னசமன் னதன்மன் னசுபன்
னதபன் னபரன் னகிர்பன் னயமன்
மதனுன் மதன்வஞ் சகன்விஞ் சிபதுன்
மதிசம் ப்ரமன்மந் தனென்வம் சகனே. (உசு)

ஆகா தனசெய் பவன க்ரமனு
பாதன் னபிமா னியபா யனகன்
சோதா கரனு குலிதுக் கசுகத்
தொந்தந் தருவிப் ரமனுர் துணையே. (உஎ)

குருரன் குருகிந் தகனந் தன்மகா
குபிதன் கிர்பணன் குவிர்தன் னவிர்தன்
சோரன் பரிவா திசுகிர்ப் பிசிதன்
சுரவிர்த் தனதி ப்ரமனுர் துணையே. (உஅ)

தேகன் ப்ரதுக் கசுகன் கபடன்
செடிலன் குடிலன் டம்பன் விடயோச்
சாகன் னதிசா கசிகன் னசகன்
சடீலன் விபலன் னிவரார் தமடே. (உகூ)

கோரன் வெருமா னிருடும் பதாண்
குணாதிக் ரகன்விக்ரகமே வியசிங்
காரன் னவசன் விவசன் கலகன்
கலன்மத் யமனுர் படைகட் டுரையே. (௩௰)

வேறு.

அஞ்ஞன சங்கமனு மார்யசன நிந்தகனு
மங்காரனு மந்தனார்மகா
யெந்துநபரி யாசகனு மான்மபரி மோசகனு
மெங்கள்படை யென்றுகருதே. (௩௧)

விங்கியத ராசதனு முன்மத்த தாமதனு
நிட்டுரனு மித்ரசடனு
மங்கியப்ர ஞாஷகனு மதன்மப்பிர சஞ்சகனு
மூப்ரதனு மியாவர்படையே. (௩௨)

அநர்த்தவிட யத்திலநு பேர்தனெனு நீசனு
மநர்ச்சகனு மிந்திரியகனு
மநித்தியசுக சங்கதனு நித்தியசுக வர்ச்சனனு
மாருமிவர் யாவர்படையே. (௩௩

பயப்ரதன் மகாசனபராயணன் மலன்பர
தனக்கிரகண பண்டிதனொடே
யயக்யனு மெசப்பரி நிவர்த்தகனு மூஞ்சனு
மசச்சனனு மியாவர்படையே. (௩௪

மனோரதனு மக்ருவனு மாதுர்பிதிர் வஞ்சகனு
மச்சரனு மாதருடனே
விநோதனு மசற்பரனும் விவாதனும் விகற்பனும்
விதர்மகனு மார்விதயரே. (௩௫)

வேறு.

அதிப்ர தாபனு மதிப்ர மாதனு
மனர்த்தி யேதுவு மபத்தனு
மெதிப்ர கோபனும் வெகுப்ர லாபனு
மிருக்க யாரெனை யெதிர்ப்பரே. (௩௬

சிநேக சாகசன் னித்திய வர்ச்சன
னீதி வர்ச்சன னித்திய சேவகன்
றேக போஷணன் போக பூடணன்
வேத தூடகன் யாவர் மீசனையே. (௩௭)

வேறு.

சுற்பி பாசா பரவசன் றுர்ச்சனன்
சுத்ர கன்மன் குதர்க்கன் கிருதக்ன
னற்ப சாரனனந்தனுக் காகர
னநிர்த னிந்தக னார்துணை யாவரே. (௩அ)

அப்ர சன்ன னசுசிய சாந்தக
னசற்ப்ர லாப னநித்ய நியமிதன்
விப்ர தூடகன் வேதப ராமுகன்
விடய சம்முகன் யார்படை வீரரே (௩௯)

றன்ப டைப்பெருமை யானறிகு வேனதறியான்
ருன்வ ரச்சொலிறை யைக்கொடுபொ ரச்சமாமே
, தூது முற்றிற்று. ஆ. ௫௮௧.

---

மோகன்படையெழுச்சி.

அறிவி லாமதிவி வேகனொட வன்றலைவனுக்
கறிய வோதென விடுத்தவனை மோகவரசன்
குறியி லாமை கிளர்காம னுட னெண்ணவருவெங்
கோபலோபர்படை கொண்டெழுக வென்ற பொழுதே.

வேறு.

ஈண்மைவிடு மேன்மைவிடு மெனவு ரைத்துவே
லெனவிரு கணையென விழிசெ லுத்தியே
சமைவர்க ளரிவைய ரொருக ணத்திலே
சதுமறை முனிவர்க * டவம ழிக்கவே. (௨)

ஓடிபட முனிவர்தம் விரத முற்றுரு
துலையுவ ரொருகையொ டொருகை தட்டியே
வெடிபடு திருநகை நிலவெ றிக்கநீள்
விழிசுட ரிருகுழை வெயிலெ றிக்கவே. (௩)

துடியிடை யினுமிகு மிருத வத்தினோர்
துணியுற விணைமுலை மலைதொ லைக்கவே

---

* தவமிழக்கவே எனவும்பாடம்.

யடிபிணை பணிபுரி தற்கு மக்கெளு
வணிபரி புரவரி பொலிய ழைக்குமே, (௪)

சடைசில புனையினன் மயிர்ப றித்திரு
தவமெண வுடைதவி ரினனென மழிக்கினன்
னுடைசில புனையின னுடைநெகிழ்த்துருன்
னுலவிய மகளிர்நம் முனைன ழிப்பரே. (௫)

புலவிய லொருவிய புனிதர் புத்திகூர்
புலவியி லழிவகை புரிதனுற்றனேன்
கலவியின் விழவடு கரிமருப்புநேர்
கனதன வரிவையர் கலக மிக்கதே. (௬)

குருகெழு தடமல ருகுமணற்குவால்
குயிலகை வியபொழி லிசையினித்தகா
னுருகெழு மகாரிணை நிலைமுறற்றுமோ
ரொருபடை முனிவரை யுணர்வ ழிக்குமே. (௭)

வேறு.

கோங்கரும்பு முலைமடவார் குழ்போக வேண்மகரக்
கொடிமுன்போகத்
தீங்கரும்புச் சிலைமலரும் படையெடுத்துத் தென்றற்றேர்ச்
சென்றபின்னே. (௮)
இடிபோலு மிகற்றேர்மே லெழிற்படைகொண் டெரியெங்
குங் கொளுத்தித்தாமக்

கொடிபோகக் கொடுமைகொலை பழிபாவஞ் சூழவெழக்
கொடியகோபன். (௯)

வேறு

ஒழுவாறு முணர்வை யுளத்துளே
யுடையவர் தமையு மிமைப்பிலே
யொருவரோ டொருவர் சலிக்கவே
யுடலடு மமரை விளைக்கவோ
வழிவரும் விரத மழிக்கவோ
வருமறை நெறியை யழிக்கவோ
வணைபவர் தமையு மொறுக்கவோ
வதிபய மிகவும் விளைக்கவோ (௰)

அகிலட முடிய வீடிக்கவோ வசலமு மலைய வலைக்கவோ வலைகடல் சுவற வெரிக்கவோ வமரர்க ளுலக மழிக்கவோ விகலெனு மெரியி லழற்றியா ரிருபரு திகளு மொளிக்க வோ, வெரியினு மழல விழிக்கவோ வெனவிழ ளிளை ரிசைக்கவே. (௧௧)

வேறு,

ஆசையின்ப மேவிமீள்வி லாதகாத லாகுதே
ரோசைகுன்ற லோபனேகு மாண்மையாவ ரோதுவார்
புகைப்புகா விடங்களும் புகுந்துதன்னை யாவருந்
திகைக்குமாறு நிற்கவல்ல தீரனிந்த வீரனே. (௧௩)
செய்தவுங்கொ டைக்குலஞ் சிறந்தகல்வி செப்பல்போய்க்
கைதவங்க ரிப்பிரப்பி வன்படைக்க லங்களே. (௧௪)

வேறு

மதமாச் சரியா திமகா ரகரோ
ரொருவற் குளதாம் வலிசேர் படையின்
விதமார்க் கியலுந் தொலமே லெழின்மேல்.
விண்ணென் றிலைநிற் பதுமே இனியே. (௧௫) ஆக ௫௧௧.

வேறு.

மோகனெழுச்சி வஞ்சி.

எள்ளின் றுணையும் புரையற் றுலக
மெங்கும் பிருண்மூ டவெழும் படையின்
வெள்ளம் பகரும் படியோ வினியவ்
விறன்மோ கனெழுச் சிவிளம் புதுமே. (௧)

ஒண்முத் தன்மலர்க் கழலிற் பணியா
வொருமுத் தனுவந் தமடந் தையர்தங்
கண்முத் தணியத் தடமார் பணியுங்
கதிர்முத் துவடங் கள்கவின் பெறவே. (௨)

காவிற் கழியர் முனநாள் பரமன்
காவிற் கழியாது கழிந் துயிர்போங்
காவிற் கழுகுண் டுவிடப் படுதன்
காவிற் கவினக் கழல்கட் டினனே. (௩)

மன்னுந் தவமும் புகழும் மரபு
மாறு வருளும் மணியா தழியும்

பொன்னுந் துகிரும் மணியும பணியும்
பூணொன் றுநினைந் துபுனைந் தனனே. (௪)

வேறு.

அத்தற்ப தப்பொருளி னற்பொற் பதத்தையறி
வற்றுப் பொரக்கடவனு
மத்தப்பிர மத்தனினி மற்றுப்பொ ருப்பிலெதென்
மத்தக்க ளிற்றின்வரவே. (௫)

வேறு.

வருபிறவி மாறவல குரவனடி பேணுமிது
வொழியமதி மாறுபடுவோ
ரிருபுறமு மாரவரு கழுகிறகு போலவரு
மிருசவரி வீசிவரவே.

வேறு.

மதித்தொரு தனக்குள நலத்தினையு மற்றவர் வழுக்கினையு
மே, கதித்திரு புறத்தினுமெ டுத்துள தனிக்குடை கவிக்
துவரவே. (௭)

அழக்கிளரு ரின்புறு மணப்பறை கணத்தது பிணப்பறை
யுமா, முழக்கினை யறிந்துமறி யாவரசன் முற்பணை முழக்கி
வரவே.

கூற்றன மதக்கரி கொடிப்புய லணிந்துவரு குன்றனைய
தேர், காற்றன கடும்பரி நெருப்பென வமைக்கடல் கடுப்ப
வரவே, (௯)

வேறு.

எச்சில்காண லாவடிசி லிட்டவாழி தான்பூமன்றய
விட்டநீறு மார்கிறைய விட்டபூணு நூலிலுடன்
மிச்சிருறு ஞூலிபக விப்பநீப ஞூமனென
வித்தைசால வேருலவு விப்பர்கோடி ரூழ்வரவே. (௰)

இட்டவேஷி மார்கள்பெறும் வித்தையாசை யூலகல
வெக்யசாலை கோவியதில் யக்ஞமானை ராய்வடிவு
சிட்டவேட மாகமுடி தர்ப்பமாலை யோடுவெகு
செற்பவாய ராகிவரு விப்பர்கோடி தேவர்வர (௧௧)

அப்ரகாச மாகவிடு மக்குமாலை யாபரண
வச்சிமார்கள் பானமதி லப்ரபோக ராயதிக
சுப்ரகாச நாமமொடு அத்தமான ஞானபரி
சிட்டர்போல வேவருவர் கட்டசோர வாமிகளே. (௧௨)

உட்கியாரு மோடும்வகை நுட்கருல வேலரிண
முற்றகோடு தாமிருகை பற்றியோடு வார்மனிதர்
கட்கிறுத கோலமொடு கட்குவாறு ஞுவதெதிர்
கக்குவாய ராகிவரு கட்டவேட தாரிகளே. (௧௩)

சித்தியாகு மாகநல செக்காடை மூடியுடல்
சிட்டராகி மேனிலவர் சித்ரநாரி மார்களொடு
புத்தியாகி யேபுலவு புத்திநாடி வீடுதொறும்
புக்கூசை போல்வருவர் புத்தகூட வேடர்களே. (௧௪)

பகலு மெல்லியும்வ ரம்பிலாவுலக னைத்தை யுந்திசைகள்
பத்தையு, மகில பூதரையும் வாரியையுமில வல்லோரொரு
வர் தாமுமே. (கக)

அண்ட காரணமு மாவிகாரணமு மாதி காரணமு மகிலமுங்
கண்ட காரணா டங்கவேரொடு மறுப்ப ரேயொருக ணத்
தினே. (கஉ)

ஓரொ ருத்தருணர் விற்குரைக்களவி டப்படாதவுரு வுடை
யரே, யாரொ ருத்தரிவ ரொப்பர்தம்முடைய நாயனுமொரு
வரன்றிலையே. (கங)

வேறு.

கூற்றையோ விலக்குவது கொடியவர்வெங் கூற்றினையே
காற்றையோ நிறுத்துவதுங் கடியமனக் காற்றினையே. ()

சிலைகளையோ வளைப்பதுதான் வன்னெஞ்சர் சிரங்களையே
அலைகடலோ தூர்ப்பதவ ரளவில்பவக் கடல்களையே (கரு)
அல்லையோ பகல்செய்வ தறிவிலா ருளத்தினையே
கல்லையோ கனிசெய்வ தவர்கண்மனக் கல்லினையே (கசு)

கொல்விடமோ நுகருவது கொம்பனையார் தம்போக
வல்விடமே நுகர்ந்தாலு மயங்காம லிருப்பர்களே. (கஎ)
படநாகமோ பூண்பார் பார்வைமுத லைம்பொறியாம்
விடநாக மைந்தினையும் பூண்டுவிளை யாடுவரே. (கஅ)

கொழுங்கனலோ வளிக்குமது கோபமெனுங் கொடுங்கன
லே, வழங்குவது மழிபொருளோ மறைதேடும் வான்பொ
ருளே. (கக)

அடலின்வரு மவரொழியத் தாழ்விப்ப தடியரையே
முடலையுட லோவறுப்ப ததன்மூல வுயிரினையே. (உ0)

உரியநல வடியவர்க டம்பெருமை நம்முணர்விற்
றெரியுமென யாஞ்சொலிய சிறுமையே சிறுமைய்தே. (உக

வேறு.

அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய
வல்ல தன்றரன் முகுந்தனும் பிரமனு மாட்டார். (உஉ)

இடையி லாசறிந் துரைப்பவர் தாமினி-யிவரை
யுடைய நாயகன் பெருமையை யோதுவா ருளரே. (உங

வேறு.

நம்ப னலலடி யார்புடை சூழ்வர நாப்பணே
செம்பொன் மாமணி வைதிகத் தேர்மிசைச் செல்லவே
என்ன ரந்தைகெ டும்படி செய்தரு ளெம்பிரான்
முன்ன ரந்தா அந்துமி யெங்குமு ழங்கவே. (உரு)

கலைக டந்தம திநிக ரல்ல கவிகையவ்
வலைக டந்த மதிநிறை வேநிக ராவதே. (உசு

இவனை மென்றெழு தற்கரி தாமெழி லன்னமே
றுவனை முற்றொழு ஞானநெ றிக்கொடி யோங்கவே. (உஎ)

காம னும்படை யுங்கெடக் காணுநி ருபக
நாம னும்படை யுஞ்செலு மெங்கணு நாடியே. (உஅ)
பொறையு மின்சொன் முதல்வரு தானையும் போகுமே
யறிவும் வெஞ்சின மும்படை யுங்கட் டழியவே (உகூ)

வேறு.

தோஷா காரு ணியலோ பனுடன்
றுபாப் படையுந் தொலையும் படிசந்
தோஷா திகள்செல் லமுதா திகளுந்
தொலையப் படைசெல் வகைசொல் லுதுமே. (௩௰)

அமதன் சுகன்மௌ னியசிந் தகனைப்
ஸ்ரீ ரதிகூ லவதிட் டபான் னியமன்
யமனின் மமனின் மலனித் தியபான்
யஞ்ஞன் யதிபூ தகிதா காரனே. (௩க)

பிட்சா சனன்வை திகதன் மன்மகா
பலனிற் றியநிக் ரகனுக் ரதபன்
னட்சா சனவே கனகெர் வியரா
யாசன் கிர்தகிர்த் யுனதிந் தகனே. (௩உ)
தன்மன் சுகிர்தன் சுகிர்தஞ் ஞனசஞ்
சல்ன்வீ ரியனபிஞ் ஞனசம் ப்ரமனிட்

கன்மன் கவிசந் திகிர்டின் சகுணக்
கிரகணன் பலகஞ் மவிவர்ச் சிகனே. (௰௩)

வேறு.

அவாதியப யனசுலப ஞாத்திக னவிக்ரகன்
சின்மய னித்தியவிரதன்
சிவாதிபரி பூசதா தனகிர்பண ஞாதி
சீலனதி க்ரகசமனே. (௰௪)

பாவகன பிஞ்சகனி வர்த்தனன கனவிசன
வாபிகுரு பத்மபகசச்
சேவகன கிட்டோன் விரத்தனவ தானனதி
கீரனதி கிச்சலனுமே. (௰௫)

உத்தமன் சேவகனு தாரனல சுசனி
சுதர்ரனப ரிக்ரகன்மகா.
சத்தியபர னிற்பிருகன் மிதாசன னடம்பனவி
காரிகுணி சத்யதபனே. (௰௬)

சுமந்திர வசலன் னகலன நபிமானி
சுகதன்சு மனசன் சமன்
நமன்மச் சான்விசுத் தன்னநக னற்சுபா
ஞானமிர்த சங்கிர கணனே. (௰௭)

வேறு.

அருபன் னித்திய னநித்திய நிருபணன்
சொருபன் சுத்தன் சுதந்த்ரன் சுவசனே. (௩௮)

வேறு.

விபரீத பரன்னக ருயன்
விவக்ர பார்முக மித்ரன்
னபராத கினன தொந்த
னசேரகன்பல சாதன னப்ரமனே. (௩௯)

வேறு.

எந்தப் படையுன் டிகன்மோகர்க் கெழிலார் விவேகர்க்
கோரொருவ, ரெந்தப் படையைத் துணித்தடுக்க வல்லா
ரிவ்வா றதேதகசே. (௪0)

வேறு.

பாதமுதல் வன்றர நிகழ்ந்தபரி பூரண பதந்தனிலொரைம்
பூதமு மறைந்தற நிறைந்துபடை நின்றநிலை யென்புகல்
வதே. (௪௧)

செடிதரு முடற்கொடு மனித்தர்கடி வத்தன
மெனச்சனி மிகுத்தனர்சிவ
னடிதரு நலத்தன மெனச்சுரர் களித்தனர்
நிலத்தவ ரடித்துகளினல் (௪௨) ஆகூ௬௫௩.

விவேகன் படையெழுச்சி முற்றும்.

தொந்தயுத்தம்—தும்பை.

சந்தி யாதமு னிரண்டுபக்ஷ யுங்குதறுபரி
தண்டர் சங்கமதி ரச்சகல வேதமுடனே
சிந்தி யாமிருதி யாகமபு ராணவிதிகா
சாதி சங்கமொரு கோடியெதிர் நின்றதிரவே. (௧)

வார மாகவொரு மோகனர சாளவெனவே
வைத்த வந்தமன மன்னனையு மாயையுடனே
யார மார்முலை யவிஞ்சைமுத லாக்கினவரே
யழிய வம்படை வகுக்கும்விர காரதிவரே. (௨)

ஆயு மாறரிய மாயைமுத லெண்ணவரிதா
மகில சேனையுயி ராதியவை யங்கொழியவே
வீயு மாகினும் விவேகன்விடு சேனைபொருதா
வெற்றி கண்டுவிளை யாடலை விரும்பிமிகுமே. (௩)

மாளு மோகனை விவேகனழி யென்றுமனனு
மாயை யுந்துணிய வாளுமிரு தாளுமுடையான்
வேளும் வேகனு முலோபனு முனைபடையோய்
வீய வேதிருப காதிபடை யேவிவிடவே. (௪)

இலங்கு மெய்ம்மைகொடி யாகவுள தேரினயன
மென்னும் வாள்கொடு நிருபக னடக்கவெதிரே

சீதத் தாவினி தேயழ நீமிக் காவினி தேருளிர்
தேனித் தார்வன வேபசி தீர்வுற் றுவில தேசுவை
யேதெத் தாவினி தாமென வோர்வற் றேயவி வேலிக
ளேமத் தர்மல மாமிவை காமுற் றுரென வோதியே,

வேறு.

வேனி லாதன்வர விட்டபடை வீயலன்மெய்
விழிய லுற்றிசிரி யைக்கொடு நிருபகன் வெறுங்
கான னீரினி லெழுந்ததி னெழுங் குமிழியின்
கனவி னிற்கனவு போலழிவு கண்டுவிடுமே. (உ௩)

விட்ட விட்ட்படை யாவையு மழிந்துவிடவேள்.
வெற்றுங்கை யோடுபோர மேனிகொடு செல்லவிருதோண்
முட்ட விட்டெழி னிருபகன் விளங்குமறிவா
முளரி யங்கையின் முருக்கினன் முடித்தலையையே (உ௪)

வேறு

பாப ராசிமுத லானபடை கொண்டுபொரு பாதகக்
கோப ராசனை யரும்பொறை யழிக்கும்வகை கூறுவாம். ()

வேறு

இனத்தையறுத் . தறுத்தெறியக் கறுத்தெரியிற் சிவத்தே
சினத்தவகத் தினைச்சிதையப் பனிக்கதிரிற் சிரித்தே. ()
கதிக்குமொழிக் கனற்கடுகக் கெடக்குளிரக் கதித்தே
கொதித்தமனக் கனற்கினிமைப் புனற்குளிரக் கொடுத்தே.
அறுத்தழலிட் டருத்தில்வினைப் பலத்தைநினைத் தசித்தே

பொறுத்ததனைப் பொறுத்துநலக் கினைப்பெரிதுற வெருவுக
தே. (உ அ)

வேறு.

கோபனைப்புறன் காணக் கொலைபழி
பாப முற்றுந் துகளெழப் பட்டதே. (உ கூ)

தாபந் தீர்தரு சந்தோ டன்கொலும்
லோபன் பட்ட பரிசுமு ரைத்துமே. (ங0)

வேறு.

தொகுத்தநிதி பலகோடி யுண்டெனினுந் தொல்லையிலே
வகுத்தவகை யல்லாது துய்ப்பவரார் மண்ணினிலே.
ஒன்றிரண்டே யுடுப்பதுவு முண்பதுவு நாழியே
யென்றுமொரு வன்கிடையு மிருசானுக் கெண்சாணே

வேறு.

ஈட்டியிழத்தல் வெங்கான மென்றுஞ் சென்று மங்காமற்
கூட்டியிழைக்குந் தேனீயைக் கண்டார்பின்னுங் கூட்டு
வரோ. (ங ங)

ஆடும்பரத ர்வைபோல வாரும்படியு மதுபோலத்
தேடும்பொருள்கள் போம்படியுங் கண்டுந்தெளியார் சிலரு
ண்டே. (ங ச)

வேறு.

மாநிதி கோடிதேடி யும்மாகா ணியுமின்றி
போனவ ரல்லாதொக்கப் புசித்தவரார் புவிக்கணே. (ங ரு)

வேறு.

அலங்கொண்டு வேலாபன்ற னுசாபி சாசு
மிரப்புக் காப்பு மசக்பாநி யுஞ்சஞ்
சலங்கொண் டிழுக்கு மொழுக்குந் தவாவச்
சந்தாப முஞ்செற்ற னன்பற் றறுத்தே. (௩௬)

உம்பன் புலிக்கன்றி வானுக்கும் யானே
யெனத்தன் மனத்தே நினைத்தங் கரிக்குந்
தம்பன் பெருங்கர்வ முந்தானு மாண்டான்
சத்யா யுதங்கொண்ட தம்பன் றிறத்தே. (௩௭)

வேறு.

நேசநி லாவகை விருப்பொடு கலந்துநல்னே
வினைப் பின்மொழி விளம்பியு மூளந்தெளியவே
மாறி லாதசெயல் செய்துமொரு காலுமழியா
மச்ச ரன்றனை யமச்சரன் வதைத்து விடுமே. (௩௮)

மந்த ரக்கிரியு நிற்குதல வேழுகடலும்
வற்று மேழ்புவியு மாளுமுயர் வானவுலகு
மந்த ரப்படுமெ னும்படி தெளிந்துடலின்மே
லந்த ரன்றனைய நாதா னழித்துவிடுமே. (௩௯)

நெஞ்ச மொன்றுசொ லொன்றுசெய லொன்றுடையதாம்
வஞ்ச கன்றனை யவஞ்சகன் வதைத்துவிடுமே. (௪௰)

ஈரமொன்றிகழ் சாந்தியெதி ரேறியவைக்
காரமும்படையு மாண்டதொர் கணப்பொழுதிலே. (சக)

வேறு,

மொழிந்தவாச கத்தினன்று தீங்குகாணு முன்னமே
யெழுந்தவேக ஞானியோர் விவேகனு மிறந்ததே.
மடக்குமாறி லாதவாத ராசகோடி மாளுமே
யடக்கமான வீரன்வாளி னற்றதார வாரமே. (சஉ)

சுபாடிதன் குபாடிதன் சிரந்தனைத் துணிக்குமே
யபாடிதன் வெகுப்பிரலாப னாவிதன்னை வௌவுமே. ()

மாயையிச் சகத்துவத்து சித்துவீச னேயெனுந்
தூயசுப்ர புத்தனப்ர புத்தனைத் துணிக்குமே. (சச)

வேறு.

சுகனைசு கன்றனைத்து ணிக்குமே
சுபனைசு பன்றனைத்தொ லைக்குமே
யகனுயிர் பொன்றமெய்ச் சீர்த்திவா
ளதின்ற கன்றுணித்த டுக்குமே. (சரு)

உடலின கந்தையைத் தனைச்சதா
வுணருப வன்கெடுத்து வக்குமே
படாருறு சிந்தையைச்ச மத்தனோர்
பாமப தந்தனிற்ப டுத்துமே. (சசு)

வேறு.

கனலன்பவமறு கருத்துமே
வநலச னலசனை யழிக்குமே. (சஎ)

பரமன தருளினைப் பாந்தயன்
கரமென வந்துயிர் கழிக்குமே. (சஅ)

வேறு.

அவசன் றுயர்வொண் டெசுழன் றுவரும்
விவசன் றுகளாம் வகைவென் றனனே. (சகு)

வேறு,

வர தாரம காவ்ரதன் வாளியினிற்
பர தாரபரிக்ரகன் பட்டனனே (ருo)

அதி மாசுறு பந்தனை யெற்றினனே
மதி மானுயிர் வெளவினன் மந்தனையே. (ருக)

வேறு,

பவந்தக் தன்னிற் படித்துப் பரந்தெழுந்
துவந்தன் றன்னை நிர்த்தொந்தன் றொலைக்குமே. (ருஉ)

இன்பஞ்செய்யு மிறைவ னிணையடி
யன்பன் கையில நாத னழியுமே. (ருரு)

உசாவன் றின்படை யொண்டி றற்றீர்க்க
விசாரன் சாகசி கன்றனை வெல்லுமே (ருசு)

சீறு மப்ரதி கூலன் சிதையவே
யாறு மப்ரதி கூல னழிக்குமே. (ருஎ)

குடும்பச் சிந்தையுங் கோலா கலங்களுந்
திடும்பையு முந்துற வின்க ணிறந்தவே (ருஅ

பிராந்தி சத்திய வாஞ்கையிற் பட்டதே
சாந்தி யாலதி சம்ப்ரமன் பட்டனன். (ருகூ)
ஏக னார்படை யாலிப்ப டியினின்
மோக னார்படை முற்றுமு டிந்தவே. (கூ0) ஆ. எாBகூ

மோகசமன்வரகை.

விடமன்ன காமன் முதலான சேனை
விறலார்வி வேகர் படையாற்
படமன்னன் மோகன் மிகவேவெ குண்டு
படைகொண் டெழுந்து செலவே. (க)

இகன்மோகன் முன்ன ரிருண்மீ தெழுந்த
ரவிபோல் விவேக னெழவே
பகலோ னெதிர்ந்த பனிபோல் விறந்த
படுமோகன் விட்ட படையே. (உ)

ஒருகோடி யம்பு விடமோகன்மீள
வொருசண்ட வாயுவுடனே
அருகோடு மென்ன வெழிலார் விவேகர்
தனியம்பு தள்ளிவிடுமே. (ங)

வேறு.

மாளமாள விவேகனெய்ய மனத்தின்மந்திர வலியினன்
மீளமீள வெழுந்துமோகன் விடாதுபூசல் விளைக்கவே (ச)

வீயுமோகினை வேரறுமல் விடஞ்செய்மோகன் விவேகனால்
மாயுமோவுயிர் மாயையாரு மனத்தினாரு மிருக்கவே. (௫)

ஏகனாகிய வீசனந்த மனப்பசாசற வெய்யிலே, மோகனாரு
யிர் மாயுமென்றனை முன்னைநான்மறை முடிவதே. (௬)

மோகனாருயிர் மாள்வதெங்ஙனை மனப்பசாசை முடிக்கின
லென், ஏகநாதர் துணைப்பதத்தில் விவேகராச னியம்
பவே. (௭)

வேறு.

புலகதிகள் யாவையு மரிக்கவே 'புகலிடமி லாமனநடுக்குற
வுலகுபதி ஞானமொ ரிமைப்பிலே யொழியுமறி யாமைபி
னொளித்ததே. (௮)

மனமுமறி யாமையு மரிக்கவே
மதிபெறொளி வாள்கொடு துணிக்கவே
முனமுதலு தாயெனு மவிச்சைதான்
முடுகமதி வாண்முக முழுத்தியே. (௯)

பரவுணர்வு வாளினைவி திர்க்கமா
பருதியென வேயொளி செறிக்கவே
யிரவுவடி வாகிய வவிச்சைதா
னிகலழிய வாருயி ரொளித்ததே. (௰)

அகலிடமி யாவுமத னைக்கொடே
யடையவழி யாவனு பவத்தினாற்
புகல்வரு மாயையை யறுக்கவே
புராணபரி பூரண மெறித்ததே. (௧௧)

ஆக்கை யுற்றபொரு ளென்றக மதித்தமதியைத்
தாக்கை யுற்றபொரு டன்னின்மதி தள்ளிவிடுமே. (உ௰)

ஐய மேயமைவ தானமன னங்கழியவே
வைய மேயமைவ தானமன னங்கழியுமே (உக)

பாத மாயறிவி றந்தபொரு ளொன்றுமிலதே
பாத மாயறிவி றந்தவொளி யொன்றுமுளதே. (உஉ)

ஞான மாகிய வகம்பிரம மாகியதுபோய்
ஞான மாகிய வகம்பிரம மாகியதுவே. (உ௩)

வேறு.

ஞான நாடகங் கண்டுள மகிழ்ந்தன ஞாதன்
வான நாடரும் வணங்கினர் வந்தடி மகிழ்ந்தே. (உ௪)

பேத மாயையும் புதல்வருங் கிளையுடன் மடிந்தார்
போத மாகிய சேனையும் பரன்பதம் புகுந்தே. (உ௫)

ஈச னின்னன மழிக்கவெண் டிசைகளுங் கீழ்மேற்
பேச நின்றிடு மகிலலோ கங்களும் பிணமே. ஆக எ௩௧.

---

களங்காட்டு

வேத தானியம் புவதென விறைவியுண் மகிழ்ந்து
போத நாமென விரை வொடும் படுகளம் புகுந்தே. (க)

வேறு

அய்யமார்கில் சோதியாகு மேகனைச்செ லப்படும்
வையமாவி யீசனுக்கு மாயைமார்தல் பார்மினோ. (உ)

ஆலியாக்கி யெல்லையற்ற சனனமாக்கு மப்பெரும்
பாவியாமம் மாயையமாது பட்டபாடு பார்மினோ. (௩)

வேறு.

அயர்ந்தபொரு மோகனை யளித்தவனை முன்னம்
பயந்தவழி மாயைபொடி பட்டபடி பாரீர். (௪)
மங்குமிட மின்றியொரு மாத்திரையி னுள்ளே
எங்குமுல வும்மனை யிறந்தபடி பாரீர். (௫)
ஆகவள வாகியுல காண்டவறி வில்லா
மோகவய ரின்மனை முடிந்தபடி பாரீர். (௬)

வேறு.

தூமங் கலந்த குழன்மடவார் சூழக் கிடப்பத் தூயவெழிற்
காமன் கிடந்த கிடைபாரீர் காகம் பிணங்கு மியல்பாரீர்.
கரும்பார் கன்னலெனமொழியுங் கனிவாய் பட்ட படிபா
ரீர், சுரும்பார் குமிழே யெனப்புகழுந் துண்டம் பட்ட
படிபாரீர். (௮)
ஆரக் களபச் சேறுடி யறிவோர் தமையுந் திறலழிக்கும்
பாரக் கலசப் பயோதரங்கள் பட்டுக் கிடந்தபடிபாரீர்.

வேறு.

தவளத் தி னித்திலமோ தண்புறவின் முல்லைமுகை
தானோ செய்ய
பவளத்திற் பொதிந்ததெனும் புன்மென்பாய் முடிந்தபடிபா
ர்மின் பார்மின். (௯)

இணையென்ன மலரென்ன பெரியதபோ தனருளனும் பே
தஞ் செய்யும்.
இணையென்னக் கற்றவருந் துதிக்குங்கண் பட்டபடி காண்
மின் காண்மின். (௧௧)

வேறு.

பரிபுரபி தங்களவை பாரீர் பரிமள மணஞ்செய்குழல் பா
ரீர், நரிபொருது கொண்டபடி பாரீர் நலன்மருவு மன்ப
மதி பாரீர். (௧௨)

வேறு.

கலைக்கு முறிஞர் தஞ்செவியுங்
கண்ணுஞ் செவிடுங் குருடுமாய்க்
கொலைக்குழ் வகைசெய் திடுங்கொடிய
கோபன் கிடந்த கிடைபாரீர். (௧௩)

வேறு,

ஆசுறுமா வியும்பொருளு மளித்து நாதற்
கவனருளா லளிந்த நாட ளாதே
காகமுநாய் கழுநமனும் பிறவு முன்னைக்
கைவிட்டுக் கிடந்தநிலை காண்மின் காண்மின். (௧௪)

முன்புமிகப் பொருள்பலருந் தேடித் தேடி
மூக்கையுடன் கொடுபோகா திறக்கக் கண்டும்

பின்புமிகப் பொருட்பேடுமெ வாவன் செத்துப்
பிணந்தின்னுமா யங்கள்ந்த பெருமை பாரீர். (௯௫)

வேறு.

அடித்தலை வணங்குக பால
ரமைச்சரொ டிருந்தநிர்ப ராசன்
முடித்தலை கிடந்தபடி பாரீர்
முனைச்செயன் முடிந்தபடி பாரீர். (௯௬)

உனைவரு மகக்கைதயபி டீர்ண
முனைவிருந் மனைம்பொய்கள வாதி
யனைவரு முவந்தனினை யோடு
மடையவு மிறந்தபடி பாரீர். (௯௭) ஆக. ௭௱௬௰

---

கூழடுவோர்.

என்றுதனி நாயக ரிகற்கள மியம்பிக்
குன்றுதவி லாவினிய கூழட வுரைத்தே. (௧)
ஆங்கினி திருந்தன ளணங்கடு மடைக்குப்
பாங்கினிய பேய்மகளிர் பற்பலர் திரண்டே (௨)

வேறு.

அகமாறீபுற முகமாறீயறி வறிவாளேபிறி தறியாதாய்
முகமாறீருக வடிவாய்கூழட வாரீர்கூழட வாரீரே. (௩)

ஈதிதெனநிகழ் வெல்லாமறிவுரு வல்லாவிலங்கெனுநல்லே
வாதியறிவுரு நீதிகூழட வாரீர்கூழட வாரீரே.

துறவிதியவை மறவியினியவை சொல்லிதனியறு செ
விநல், லறவிநல்மிகு முறவிகூழட வாரீர்கூழட வாரீ

வேதிவினையொடு காதியழகிய மேதாய் விண்முதல் யா
கு, மாதியணிமிகு சோதிகூழட வாரீர்கூழட வாரீரே.

திருவிஞானநல் லுருவியழிவறு சித்திபுகிர் வறுபத்திசெ
மருவியுலகிய லொருவிகூழடவாரீர்கூழட வாரீரே.

வேறு,

உயர்ந்த வாரணக் கொம்பேயு லக்கையா
யோங்கு போதகக் காலுர லாக்கியே
பயந்த மாயையின் மக்களின் பற்களைப்
பரம னாருள் பாடியிடித்துமே. (அ) ஆ௨ எ

சும்முலக்கை.

உகைக்குமனத் தாருடைய வுரனெல்லாங் குரவனடி
அனைக்குமள வானதுகாண் சும்மேலோ சும்முலக்காய்

ஊன்றும் புறக்கரண முட்கரண மொடுங்கிடவே
தோன்றுமை தோன்றியதே சும்மேலோ சும்முலக்காய்

சான்றென் றறிந்திலையோ சகலமுமாய் விடத்தோன்று
தோன்றுமைம் தோன்றியக்காற் சும்மேலோ சும்முலக்காய்

சான்றாகு மறிவொழியச் சாக்கியமாஞ் சகத்திதன்றாந்
தோன்றாது கண்டாமோ சும்மேலோ சும்மூலக்காய். (௪)

விரியுமிடத் தொகுதியும் புரியுமிடத் துணர்வறியுந்
துரியமதிற் றுரிசளகாண் சும்மேலோ சும்மூலக்காய். (௫)

அங்குணரா மையமுணர்வு மாகியதோ ளறவிருந்து, துரங்
கினர்காண் சமமடைவார் சும்மேலோ சும்மூலக்காய். (௬)

தெரிபாதென் பதுந்தெரிந்த விடத்தல்லாற் றெரியாத
துரியாதீ தம்மிதுகாண் சும்மேலோ சும்மூலக்காய். (௭)

துரியாதீ தந்தன்னிற் புரிந்தாலுந் தொல்பிறவித்
துரிசான தொழியாகாண் சும்மேலோ சும்மூலக்காய். (௮)

துஞ்சுதல்கண் டாயதிதம் பிறப்பதுகண் டாய்துரியந் [illegible]
சல்பிறப் பொழிந்திலகாண் சும்மேலோ சும்மூலக்காய் (௯)

தொல்லையிறை யாகமஞ்சொற் றுரியாதீ தஞ்சுருதி, சொல்
லுகின்ற பரவுடல்காண் சும்மேலோ சும்மூலக்காய் (௰)

கேட்டதென் றறியாத வதிதத்தைக் கேடின்றிச், சூட்டி
னது பரவுடல்காண் சும்மேலோ சும்மூலக்காய். (௧௧)

நீங்குதலில் லாவறிவே நிகழ்ந்தக்கால் விழிப்பதுவுந், தூங்
குதலு முண்டாமோ சும்மேலோ சும்மூலக்காய். (௧௨)

சத்தமாதிகளுமெலாந் தற்சொருப மானபரி, சுத்தமாய்
விட்டதுகாண் சும்மேலோ சும்மூலக்காய். [௧௩]

கருதவொண்ணா வெண்ணிறந்த காட்சியெல்லாங் கண்ணான
சொருபமாய் நிகழ்ந்ததுகாண் சும்மேமேலா சும்மூலக்காய் ()

தோன்றியவிவ்வுலகமெலாஞ் சொரூபமாய் நிகழ்ந்திதெனத்
தோன்றியதுந் தன்கண்ணே சும்மேமேலா சும்மூலக்காய். []

எல்லாவுண் ணாமுமின்றி யிருந்தபடி யேயிருக்கச், சொல்
லாமற் சொல்லியவா சும்மேமேலா சும்மூலக்காய் (௧௫)

எல்லார்மீ யல்லாத விறையியல்பை யின்னதென்று, சொல்
லர்ட விரருண்டோ சும்மேமேலா சும்மூலக்காய். (௧௭)

புலனறுபாழ் வருஞ்சீவன் போதப்பாழ் வருமீசன், சொலவ
றுபாழ் வருஞ்சொருபன் சும்மேமேலா சும்மூலக்காய். (௧௮)

வையமுயிர் பரமாக்கு மாயைப்பாழ் மூன்றுமறத், துப்பசு
டர் தானேயாஞ் சும்மேமேலா சும்மூலக்காய். (௧௯)

இடரின்பஞ் செயுமாயை யிருளின்ப வறியாருஞ், சுடரின்
கண் டோன்றுமதோ சும்மேமேலா சும்மூலக்காய். (௨௰)

சொரூபன்விழி மலர்கண்டு சும்மாவி ருந்துவிடச், சொருப
பரிபூரணமாஞ் சும்மேமேலா சும்மூலக்காய். (௨௧)

வகையுணர்வு மாண்டிடத்தே வாயிலா மட்குடத்திற், றோய
மென நிறைந்ததுகாண் சும்மேமேலா சும்மூலக்காய். (௨௨

ஊமைமொழி கொடுபிரம போதவுணர் வுற்றபடி, தூய்மறை
யின் முடிவுரைக்குஞ் சும்மேமேலா சும்மூலக்காய். (௨௩)

தற்பதத்தின் றன்னிலைமை தானறிய வோதுதலால்
சொற்பதத்தில் வாராதகாண் சம்மேலோ சம்முலக்காய் ()
உற்பலத்தி னழகுமண முருப்போல வொன்றின்கண்
சொற்பதிசத் தியமாதி சம்மேலோ சம்முலக்காய். (உரு)
அல்லையுங் குழன்மாயை யவள்பயந்த வகிலம் வெறுஞ்
சொல்லேயாய் விட்டதுகாண் சம்மேலோ சம்முலக்காய்.
அலைந்துவரு முனைவிகற்ப மழிந்துவிடப் பிறவியெலாந்
தொலைந்தபடி கண்டாயே சம்மேலோ சம்முலக்காய். (உஎ)
இன்னதென மறைமுடிக்கு மியலாத விப்பரிசைச்
சொன்னபடி கண்டாயோ சம்மேலோ சம்முலக்காய். ( )
சொல்லாத மறைமுடிவைச் சொல்லாமற் சொன்னதனைச்
சொல்லாட விரகுண்டோ சம்மேலோ சம்முலக்காய்.
சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான்
ஸ்ரோத்திரமே வேண்டுவது சம்மேலோ சம்முலக்காய்.

ஆ. எகூச.

---

வாழ்சமைப்பு.

ஏகன தடியிணை யிங்ஙனேத்தியே
மோகர்தம் பல்லெலா முறியக் குத்தியே. (க)
புண்ணிய னடியிணை போற்றி போற்றியே
திண்ணிய போதகச் செவியிற் றெள்ளியே. (உ)

எமதி யாமென வெண்ணினா ராகியெலா மெடுத்
தமுது செய்து திருக்கைகளி லக்கினை யன்னளையே. (கஉ)

பஞ்ச பாசமி லேயெனக் காயெனப் பண்ணியே
பஞ்ச பாசமடைக்கா யமுதுப டைப்பரே. (கங)

பத்த ராவிய ருருதி ருப்பவை யத்திலே
வைத்த வாயமு தத்திளின் மிச்சில் வழங்கவே. (கச)

வருக வென்றுக ணங்களை வள்ளல்க ளென்றுரு
ருருகு நெஞ்சொ டழைப்பர்க டம்முட னுண்ணவே. ()

ஆக அரசு.

---

இலகும் போதக் கண்விழித்தங் கெல்லாம் போத மெனக் காணு, விலகும் போதமாயையென வோதும் பேய்கள் வாரீரே. (க)

காணுஞ் சித்துத் தான்பரமன் காட்டுஞ் சித்தென் றுள்ளபடி, பேணு முண்மைப் பொருட்பேதம் பேசும் பேய்கள் வாரீரே. (உ)

வேதா விரோத மறவொன்றும் வீட்டிற் புலவா நாட்டிலெனப், பேதா பேத நிலைநிற்கப் பேசும் பேய்கள் வாரீரே.

கருதும் பொருளெல் லாமழியுங் கருத்தற் றதுவே வீடென்று, சுருதி சொன்ன பொருட்சொல்லுஞ் சுகதப் பேய்கள் வாரீரே. (ச)

எல்லா வுலகுங் கருமுடிந்த விடத்தே முத்தி யெல்லாமா

போக்கும் வரவு மறுத்தகழல் போற்றிப் போகக் கூழுண்,
டு, வாக்கு மனமு மிறந்திடத்தே வாளா விருக்க வாரீரே.
ஆக்கை யறுத்துக் கரணங்க ளறுத்துச் சீவ பரமறுத்து
வர்க்கை யறுத்தா னந்தக்கூழுண்ண வாரீர் வாரீரே. ( ),

வேறு,

விடாயெல் லாமென்று பொன்னடி சூட்டியே
வேதகஞ் செய்த வீரனை வாழ்த்தியே
விடாயெல் லாங்கெட வுண்ண வருமி
னீரு முள்ளக் கதத்தை விளக்கியே. (கசு)
இல்ல றந்துற வென்றிலை வேண்டினு
யாவ ரேனும் வருகென் றிடுவதே
நல்ல றமெனை யாவர்க்கு நல்கினார்
நாதர் வெல்களக் கூழுண்ண நல்கியே (கரு)

வேறு.

அலகைகள் கூழிற் கலமாலற்று ரமுதைப்பெற்
றுலகுயிரீசற் பகிர்வற வெல்லா முடனுண்டே. (கக)
மெத்தித் தாகங் கெடநுகர் மெய்ஞ்ஞா னானந்தந்
தித்தித் தாக மயிர்க்கா ரேறுந் தேக்கிட்டே. (கஎ)
திருகறப் போதப் பேய்பசி யேயோ, திருஞானம்
பருகப் போகப் படுவது பண்டைத் தாமுண்டோ

வேறு.

துஞ்ச லின்றியுணர் வின்றிழுய லின்றியய லுந்
தொடர்வு மின்றியிட ரின்பமுத லின்றியெவையு

மெஞ்ச லின்றியிது வென்னுமியல்பின்றியுளதா
மியாவை யும்பிரம மாகியதி ருந்தபடியென்.

ஆ. அஉஅ.

---

வேறு- குணலைவாழ்த்து.

அலைமிசை யாறு மயன்முதலா
மண்டருந் தேடற் கருப்பதமென்
தலைமிசை யானவை பாடீரே
தன்கருணைத்திறன் பாடீரே.

ஒருநய மின்றி யாருமுழக்கு
முற்பவ நோய்கெடப் பார்த்தருளுந்
திருநய னங்களைப் பாடீரே
செய்ய கருணையைப் பாடீரே.

ஒழிவற்ற சோதி யுணர்வுதன்னை
யுளங்கைக் கனியெனக் கண்டுகொள
வழியிட்ட வீரனைப் பாடீரே
வார்த்தை யொன்றுலென்று பாடீரே.

மரண பயங்கள் மறுத்திடவே
வடிவு புனைந்து வரும்பெருமான்
சரண நிகழ்ந்தமை பாடீரே
சந்தத முட்டுதம் பாடீரே.

உன்ன வரிதென் றுபநிடதங்க
ளோதும் பொருளை யொருமொழியிற்
சொன்ன விரகனைப் பாடீரே.
சொருபா நந்தனைப் பாடீரே. (௫)

பவமாயம் வேரறப் பார்த்திறைவன்
பதத்திலும் பண்டை நாமொழிந்து
சிவமா யிருந்தமை பாடீரே
சிவப்பிர காசனைப் பாடீரே (௬)

புத்திக்கு மெட்டரி தாயபொருள்
புவனியில் வந்தைம் புலன்களினுக்
கித்திக்கு மாறினைப் பாடீரே
தேசிக ராசனைப் பாடீரே. (௭)

ஊன நடங்கண்டு முன்னநம்மை
யொருரு வாய்வந்து ணர்த்திக்கண்ட
ஞானந டந்தனைப் பாடீரே
நடராச சன்றனைப் பாடீரே. (௮) ஆ. ௮௩௯

---

மங்கலவாழ்த்து,

புரியும்விழி தந்தகழல் வாழியே
புறமகமி ருந்தபொருள் வாழியே

சூரியமு மிறந்தசுடர் வாழியே
சொலவற விருந்தசுகம் வாழியே.

வேறு.

பேதம் பேதம றுத்தவன் வாழியே
பேதமை நீலவ ளர்த்தவன் வாழியே
போதமை போதம றுத்தவன் வாழியே
பூரண போத சமுத்திரம் வாழியே.

அறந்தவர் கைப்பட்டி ருந்தவன் வாழியே
தொடர்ந்து பிடித்துப் புரந்தவன் வாழியே
பிறந்த வுளத்திற் றிகழ்ந்தவன் வாழியே
பிரமித் தெனக்குத் தருங்கழல் வாழியே.

மறந்து நினைக்கப் படாதவன் வாழியே
மயங்கு மனத்தர்க் கிலாதவன் வாழியே
பிறந்து மரிக்கப் படாதவன் வாழியே
பெருங்க ருணைக்கற்ப காடவி வாழியே.

வேறு.

உருவருவொ டொளிலது மொழியில்லான் வாழியே
யுளபொருளை யுணர்விவை யுதறுமவன் வாழியே
கருவழியை யழிபவரு காசரணன் வாழியே
கழலும்விழி கருணையுட னருள்சொருபன் வாழியே.

அழகுபெறு மௌனபத மருளுமவன் வாழியே
யடியருள முருகவரு மருளமுதன் வாழியே
பழகிவரு பவதுயரை யழிசெய்பவன் வாழியே
பரகருணை வடிவினிகழ் பரமகுரு வாழியே. (சு)

அறிவுதனி லுருகுமறி வருளுமவன் வாழியே
யகமிகழு மறுவிழியி னமருமவன் வாழியே
பிறிவதறு புலனுருக வருளுமவன் வாழியே
பெருவிழியி னுருவழிசெய் பெருநிலையன் வாழியே. (எ)

வேறு.

அன்னையெ னக்கய லாக்கினான் வாழியே
யல்லல றுத்தெனை நோக்கினான் வாழியே
யென்னை யெனக்குற வாக்கினான் வாழியே
யின்னமு தத்துரு வாக்கினான் வாழியே. (அ)

வேறு.

தொழுமவ ரர்வி வாங்கிய வங்கணன் வாழியே
சுகமக மான சாந்தி நெஞ்சினான் வாழியே
யெழுபவ நாச மாஞ்சொல் லொன்றினான் வாழியே
யிமையவர் மூவர் தாந்தொ ழும்பிரான் வாழியே. (கூ)

ருரு.

கருதிய கோலமாந்திரு மேனியானீ வாழியே
கதிர்வர் சோதி தாம்பெறுஞ் சோதியான் வாழியே
சுருதிக டேடுவான்பொரு ளாயினான் வாழியே
சிகமக மாக யாம்பெறுஞ் சோதியான் வாழியே. (௧

வேறு.

தொழுகுலம்வி ளங்கவிமை யோரென்றும் வாடமேன்
சுருதிகள நந்தமுக மாய்நின்று தேடமுற
வெழுகுலம் விளங்கவடி யேனின்று கூடவே
யிணையடி விழங்குசொரு பானந்தன் வாழியே. (௧

வேறு.

மூவர்தேவர் வாழியென்று முடிவணங்கு திருகழற்
றேவதேவன் வாழியே சிவப்பிரகாசன் வாழியே. (௧௨

வேறு.

அலைவா மென்றங் கலையிடு தர்க்கப் பசாச மோசகன் வாழி
யே, யதுநீ யென்றங் கருமறை யுச்சத் திகிருந மோ
பெருள் வாழியே, சொலைவ வென்றுந் தொடர்வரு ச
சிற் சுகாதி காரணன் வாழியே, சொருபானந்தன் கபி
புனை தத்துவப் பிரகாச மாமுனி வாழியே. (௧௩

ஆக அசகம.

மோகவதைப்பரணி.

தத்துவநிருபகம்—முற்றிற்று.

பதினெட்டாவது

# அமிர்தசாரம்.

## தத்துவதரிசனம்.

வெண்பா—கலிக்கட்டளை.

### கடவுள்வணக்கம்.

ஞானக்கண் ணுளார்க்கு ஞானனந் தச்சுடரா
யூனக்கண் ணுளார்க் குலகமாய்—வானந்
தனைக்குப் பெறவரிய தற்சொருபன் பொற்றா
ளெனைக்குப் பெறவெளிதே யின்று. (௧)

### அருளிறைவணக்கம்.

அறியாமை யாந்திமிரத் தந்தனும் வீட்டி
யொன்றிகாண வின்றி நிலையற்—றிருவேற்கு
ஞானருஞ் சனத்தாலே நாட்டந் தனைத்தந்த
சோனுந் தொழக்கடவ கோ. (௨)

### வேதச்சிறப்பு.

இதிலுள்ள தெல்லாக் கலைகளினு முள்ள
திதிலில்லா தியாவையினு மில்லை—யதினாலே
யாதுமறிய விரும்பினான் யாதுமுள
வேத மறிவான் விரைந்து. (௩)

ஆகமச்சிறப்பு.

கறபவாக ளெப்பொருளுங் காண்பவர்க்குக் கண்ணாது
முற்பவநோய்க் கெல்லா மொருகடுவாங்-தற்பொருடான்
யாதா வுணர்ந்தா ரவர்க்கதுவா மெக்கலையு
மோதா துணர்ந்தா னுரை. (௪)

அறிஞருரைச்சிறப்பு.

எந்தக் குலமாயென் னெந்தக் கவியாயென்
னெந்தச் சமயத் தெவராயென்-சிந்தைத்
துறவிதருஞ் சொல்லே தூய்தாவ தல்லாற்
பிறவிதருஞ் சொல்லே பிற. (௫)

நூற்பெயர்.

வேதா கமமோதி மெய்ம்மை விளங்குதற்குப்
போதா தெவர்க்கும் புருடாயு-வோத
வுறுமமிர்த சாகரத்தே யுள்ள மதனாற்
பெறுமமிர்த சாரமெனும் பேர். (௬)

அவையடக்கம்.

வேத மொழிப்பொருளை விண்ணவர்கண் மூவருமுன்
போத வுணரா வுலகறிய-வோதுகேன்
வானின்ற வல்லிருளை மாற்றுகின் றேனெழிப்பன்
யானென்ற மின்மினியே யான். (௭)

நன்னெறியுரைத்தல்.

இம்மை மறுமை நிலையின் றெனவிடுக
செம்மை நெறிநடக்க சித்தந்-தமைமீட்க
தம்மை யுணர்ந்தோர் தலைப்படுக தத்துவத்தின்
மெய்ம்மை யறிக விரைந்து. (அ)

அருமையுரைத்தல்.

பெறவரிது மக்கட் பிறவிபெற் றாலு
மறிவுறு லாய்த லரிதே-வதினுந்
துறவுடைய ராத லரிதே யதின்மெய்
யறிவுடைய ராத லரிது. (௯)

ஞானிலக்ஷணம்.

அறிவுள்ள தல்லதில தென்றறிவான் ஞானி
யறிவான் முழுது மறிவா-னறிவ
னறிவறி யாமை யறவிருந்த வண்ணல்
மறைபோது வான்பொரு டான். (௰)

ஞானிசீலம்.

அருந்தல் பொருந்த லவையொக்கு மேனும்
பெருந்தகையோ ருள்ளம் பிறிதே-திருந்து
மனத்தின்வே றேபதியு மைந்தனுமம் மாதின்
றனத்தின்வே றல்லவே தான். (௧௧)

### ஞானிசரிதை.

தீதென நன்றெனச் சிந்திப்ப ரோவெண்ணி னோர்க்
கோதென மன்றே யுலகெலாம்—பாதலத்திற்
றீதாக னென்றுதல் சிந்தித்தி டச்சாத
னேயேதாவிற் குண்டோ விதி. (க

### ஞானிபெருமை.

விண்ணே பெரிது மிகவீசன் கைவழிபா
மண்ணே யதுபெற்ற மாமாயை—யெண்ணிற்
சிவனிற் பெரியாரிற் சிந்தையிலார் வைத்தா
ரவனிற் பெரியா ரவர். (கக

### ஞானியேவற்சிறப்பு.

எங்கே வெளிப்படுக வென்று னொழின்ஞானி
யங்கே வெளிப்படுதற் காதரித்தே—யெங்கும்
பரமனவ னேவல்செயப் பார்த்திருக்கும் யார்தான்
றரமவ னேவ றனக்கு. (க௪

### ஞானிபூசைச்சிறப்பு.

அவனுண்ட தண்டமெலா முண்ட தயனுஞ்
சிவனுந் திருமாலு முண்டார்—சிவமென்று
பூரண ஞானியைப் பூசித்தான் பூசித்தான்
காரணனைக் கண்ணாரக் கண்டு. (க௫

## ஞானியையிகழ்ந்தவர்கேடு.

எழின்ஞானி யையிகழ்வார் கேட்டா ரிகழ்கேட்
டழலா ரனுமதித்தார் நால்வர்-கழலுறுதன்
மேதக வென்றவரை விட்டகலா தார்பஞ்ச
பாதக ரென்னப்படும். (எசு)

## கூடாவொழுக்கம்

யோகத்தி னுண்மை யுணர்வின்றி யூண்பொருட்டா
லேகத்தி னின்ற மௌனவியம்பி-மோக
மனத்தவல மாற்றாத வல்வேடர் தம்மை
நினைத்தவருங் காணார் நெறி. (எஎ)

## கனாவிதி

நன்ஞான ஞானி மரியா னொருநாளு
றூன்றூன மோக விருண் முருக்கித்- தன்னுருவைக்
கண்டபொழு தேகழியுஞ் சூக்கவுடல் கன்மபல
மூண்டுபோந் தூலவுடல். (எஅ)

தத்துவ ஞானி திருமேனி தாங்கினு
ருத்தம லோகத்தி னும்பரா-முத்தன்
றிருக்கோயில் கொண்டவிடந் தேவா லயமென்
றிருக்கோது கின்றவிடம். (எகூ)

உலககாரணம்.

அணுவென்பர் மாமாயை யென்ப ரணுவின்
புணர்வென்பர் பூதமே யென்பர்- குணமென்ப
வெவ்வே றுவமோ ருகவிதற்கே தேறுமென்று
வவ்வேது வேயேது வாம். (உ0)

காரணகாரியவேறின்மை

மன்னு முதற்பொருளின் மன்னுக வில்வுலகம்
பின்ன மெனுமாறு பேசற்க-பொன்னே
யணியா வதன்முன்னு மப்பொழுதுங் காய்ச்சி
மணியான போது மறித்து. (உக)

ஞானந் தச்சுடராய் நன்றாகி யொன்றான
நானு கியபடத்திற் றன்றன்று-ஞானவா
யார்த்த கடலுலக மாமோ வியமெழுதிப்
பார்த்து மகிழ்ந்தான் பரன். (உஉ)

நானிலநீர் வைமுட்டை நால்வகை யோனிசுரர்
மானிடர்நீர் வாழ்பறவை மாகிருமி-ஞானமிலா
மண்பட்ட தாபரமென் றேழாய் வரும்பவனு
றெண்பத்தி னுன்கா யிரம். (உஈ)

ஊர்வ பதினொன்று மொன்பானு மானுடவர்
நீர்பறவை நாற்கால் நேர்பத்தாஞ்-சீர்திகழு

மூவாறுந் தாபரங்கண் மூப்பத்து மும்மையோ
ராவா ரொருப தாறும். (உச)

## அணுப்பிரவேசம்.

ஆன கடங்க ளளவிலவற் றுட்புகுந்து
வானகந் தானின்ற வாறெருக்கும்-யோனிகளெண்
பத்துநான் காயிர நூ றுகப் படைத்தவற்று
ணித்தனார் நின்ற நிலை. (உரு)

## அழிப்பு.

ஆன வுடம்பனைத்து மைம்பூதத் தேயழியும்
வானுறு பூதமிறு மாயையினி-லூனு
மொழிந்தமா மாயவிரு ளுள்ளொளியா ரிம்ப
ரெழுந்தஞா னத்தா லிறும். (உசா)

## பவகாரணம்.

செறிபொருள் தாகித் திகழ்பளிங்கு போல
வறிபொருள தான வறிவன்றுன்-றன்னை
யறியப் பிறவி யறலாற் பிறவிக்
கறியாமை யாகு மடி. (உஎ)

## உடலுற்பத்தி.

ஆதபன்வா னுருதியா னல்குமதி ணேடுதியா
மோதனமுண் டாயிருநீ ருண்டாகு-மாதுடனுண்

டன்னுருவா மிக்கநீர்க் கண்டஞ் சமங்கவிழ்தல்
வன்னிபுழு வுண்டேன் மலடு. (௨௮)

பிண்டகோசம்.

சுவர்செய்து மண்டசையாச் சோரிநீ ராக
விவரங்கள் காலியங்க விட்டுக்-கவர்கால்க
ணட்டுக்கை வைத்து நரம்பிட் டிரம்பெறவே
கட்டித்தோல் வேய்ந்தவகங் காண். (௨௯)

பிண்ட வுருவிற் பிறத்தலாற் கெர்ப்பத்திற்
பிண்ட வுருவா யிருத்தலா-னுண்ணும்
பிண்ட மிடவேண் டுதலா லுடற்பிண்டம்
பிண்ட மெனப்பேர் பெறும். (௩௰)

அண்டகோசம்.

நிலனேழு சூழவரு நீரேழு கீழ்பா
தலமேழு வானேழு தப்பக்-குலகிரிக
ளெட்டுநடு மேருகிரி யேமகட கஞ்சூழப்
பட்டுளதோ ரண்டப் பரிசு. (௩௧)

அண்டபிண்டவேறின்மை.

வெளியசைவு வெம்மைநெகிழ்வுரமாம் விண்கா
லொளிபுனன்மண் கண்ணுதய லுள்ளங்-குளிர்மதியம்

கொண்டுயித் தவனறிவு கோசமாம் பிண்டத்து
மண்டத்து முண்டோ வயல். (௩௨)

வீடுபேற்று.

நெடுந்தூர மன்றமை நினைவுபோ மாறுங்
கடும்பரி கால்வைத்து வாங்கல்-படங்களுக்கோர்
புட்டகம் வேறு புனைத வினைபோலும்
விட்டுடலங் கொள்ளுநம் வினை. (௩௩)

உற்பத்தி யாந்தாதை வாயு வுடன்கூடிப்
பொற்புற்ற கொங்கையர்தம் போகத்தே-கெர்ப்பத்தைக்
கொண்டுதை செல்லுமெனக் கூறுவீர் கூறீர்கண்
மண்டுகேஞ் சென்ற வழி. (௩௪)

உடலிழிவு.

மணமென் றியமாந்தர் வாயுப்போங் காட்டிற்
பிணமென்று பேரிட்டு பேர்க்கக்-கணன்வந்து
புட்கொத்து மிவ்வுடலிற் பொல்லாங் கெர்ழிந்திருப்ப
தெட்குத்து முண்டோ விடம். (௩௫)

குடும்பவிழிவு.

திடன்படு சீலந் திகழ்கல்வி கேள்வி
யிடம்படு மேதைசீ ரெல்லாம்-படமட்

குடம்படு நீர்போற் குடும்பியைக் கைவிட்
டுடம்போடு கூட வுகும். (௩

போகவிழிவு.

அந்தர குலமனிதர் சீசீ செவிமுதலர்
மைந்தானு மீடழிவ ரல்லரோ-வைந்திலொரு
வேட்கை யசுணிபம் விட்டின்மீன் வண்டு
கேட்கைமுத லோரொன்றிற் கேடு. (௩௭)

மகளிரிழிவு.

எரிகொண்டு மல்ல வெறிபடைகொண் டல்ல
வருநஞ்சங் கூற்றுங்கொண் டல்ல-கருதிநெஞ்சத்
தம்மீர்த்தார் தம்மைப் படைத்த தனியிறையார்
தம்மூரலே யாகத் தரும். (௩௮)

பொருளிழிவு.

இன்னலா மீட்டுங்கா லீட்டினு மியாவரையு
மொன்னல ராக்கு முயிரிறுக்கு-மன்னு
மனத்தைவே றாய்மயக்கு மானடுக்கஞ் செய்யுந்
தனத்தின்வே றுண்டோ தவறு. (௩௯)

அரசிழிவு.

முரசு விளங்குதம் முற்றத்திற் றெற்றி
யரசு வணங்குங் கழலா-ரொருசுணங்கண்

கல்விய காலிற் கடைகடோ றுஞ்சுழல்வர்
வெவ்விய சொல்ல வெறுத்து. (௪0)

சுவர்க்கவிழிவு.

பொதுமாதர் தோளே புணர்வ தமிர்த
மதுபான முண்டே மகிழ்வ—தெதுகோடி
சாவார் பிறப்பார் சதுமுகனோர் நாளினிது
தேவா திபரெய்துஞ் சீர். (௪௧)

நிலையாமை.

உலகி னிலைநிற்ப தொன்றில்லை யென்றே
தலைவர்கண் மூவருஞ் சாற்றினு—ரம்மே
மலைவுறு மார்க்கர் மதமு மதனு
னிலையின்மை யொன்று நிலை. (௪௨)

துக்கத்தொகுதி.

கருக்குழவி கௌமாரங் காளைப் பருவம்
விருத்த மெழுவெய்யில் வீசும்-பனிக்காலீ
கருத்தி லுறக்க முணர்ச்சியெக் காலத்
தொருத்தனின் பத்தை யுறும். (௪௩)

துறவு.

மடம்படு மிப்பிறவி மாற்ற நினைவார்க்
குடம்ப மில்கையென் றுணர்வுற்—றட்டங்கத்

அறவா மனிதர்க் கெளிதன்றே அஞ்சிப்
பிறவா நெறியைப் பெற. (௪௪)

புத்தன்.

க்ஷணமு மான்மாவுங் காரணமு மில்லை
சகலமு மாமதிக்குஞ் சார்வார்-பிறவி
வுளைவினை யுண்டு மதிபொன்ற மாய்தல்
சுகதன்றன் முத்தித் துணிவு. (௪௫)

காரணமே யான்மாக் கணபங்கி நித்தப்
பூரணமோ வீசன்வான் பொய்யே-மரணமே
வீடென்று சூத்திரகின் வேறாவிப் புத்தனெனு
மூடன்றான் சொன்ன மொழி. (௪௬)

சமணர்.

உருவருவுண் டில்லை யொன்று பலவாம்
பொருளியல்பு தானெனவே போதமருகர்க்
குறுவினை விட்டா லுலகும்பர் வீடு
குறியதற் கெட்டே குணம் (௪௭)

வெளியிற் பறந்துபோய் வீடெங்குப் பெற்றாய்
குளிர்வெம்மை கண்டாயோ கூட-வுளதில்லை
யொன்று பல்லென்று மூனளவென் றாயுணர்வை
யென்று மதிகண்டா ரியார். (௪௮)

உலோகாயதம்.

இறந்தார் பிறவா ரிலதுவா னீச
னறம்பாவ மாயிழையார் கூடல்—சிறந்த
நலனூர் சுவர்க்க நரகம் பிரிந்த
வுலகா யதன்ற னுணர்வு. (௪௯)

சடவுடறு நன்மைசாக் காடு நரகங்
கடவுள் வலிகாட்டுங் கண்ணுங்—கரும
முடியாமை காட்டு முனைவினையை மாத
ரடைவதே காட்டு மளறு. (௫௰)

மீமாஞ்சன்.

நரகுசுவர்க் கந்தீங்கு நன்றுங் கருமத்
தருமிறை தானன்றி யில்லை—பிரமமொலி
நாடுங் குணன்புத்தி ஞானமில்பா டாணம்போல்
வீடென்றான் மீமாஞ்ச கன். (௫௧)

சித்துச் சடமாகை யோமுத்தி செய்வினைகள்
சுத்தஞ் சடமிய வற்றே—சுகதுக்கம்
புத்தி குணமாயிற் பொன்றுமோ வான்குணமீர்ஞ்
சத்தப் பிரமமோ தான். (௫௨)

### நியாயம்.

அணுங்குற்ற வான்மா வநேகம் வியாபி
குணம்புந்தி யாமுத்தி கூறிற்—பிணம்போல்கை
மெய்யா மிறைவினையும் வீடுகெட்டுக் கேதுவா
கையா யிகநா னலம். (ரு

செயற்கரு வினைச்சடமாய்ச் சென்மத்தைச் செய்யிற்
றயாவிலறை மவ்வீசன் றானும்—வியாபி
குணமாகிற் புத்திக்குக் கூடா தொடுக்கம்
பிணமாகை யோவீடு பேறு. (ரு

### வைசேடிகம்.

முத்தியி னிர்க்குணமாய் முன்னங் குணங்குணியாய்ப்
பத்தியினன் முத்தியுறும் பாவனையாற்—சுத்தச்
சடப்பல ராயவத்தை சார்தலான் மாக்கள்
கடனென்றான் வைசேடி கன். (ரு

ஆவ சடலங்க ளருண்மாவே யாமகம்போ
லோவுமவத்தையுறு முன்னுணர்விற்—பாவனையாற்
கூடுமோ வீடு குணம்போய்க் குணியுண்டோ
கூடுபோய்த் தீயுண்டோ சொல். (ரு

### சாங்கியம்.

பகுதி புமான்மெய்ப் பகுதிப்பா லேவிகுதி
சகலந் தன்னிதன்கை பந்தமாம்-விகுதியாம்

யாதும் பகுதி யுடையதெனக் கில்லையெனும்
வேதனஞ் சாங்கியன்றன் வீடு. (௫௭)

முன்னரே யுண்டேற் பகுதியதான் முத்தியிலை
பின்னுஞ் சடமாம் பகுதி-பெறக்கூடா
தன்னாலே வீடெய்து மாஸினி சற்குருவைக்
கொன்னே விரும்பியதென் கூறு. (௫௮)

சைவம்.

மடவன் பசுபதி வாலறிவன் பாசஞ்
சடமா மியல்பு சும்மா-முடன்வியாபம்
பண்டுளவை மூன்றும் பசுபாசம் போயிறையைக்
கண்டுறைதல் சைவன் கதி. (௫௯)

ஈசனது தோற்றமே தெல்லாம் வியாபித்தாற
பாச மிலாதான் பதியென்னிற்-பாசமெனில்
விண்டிடா தாம்பதியால் மெய்காரணம் வேறுண்டாங்
கண்டிடா நின்ற கதிக்கு. (௯௦)

சம்மேளித சைவம்.

பாசமாம் பந்தம் பசுப்பெத்த முத்தனு
மீசனாதி யிவர்ஞானம்-பூசையா

மம்மோக மாற்றி யவரொன்றல் வீடென்றான்
சும்மேனி தச்சைவன் றான். (௬

பெத்த மோதி கெடுமான பின்கெடும்ம
முத்தியும் பாசந்தான் முன்னுள-தேற்கெடுமே
சத்தி யெனில்வெம்மை போலுற் றழலுண்டோ
வுத்தி யிலதிரண் டொன்றாகா தொன்றுகெடின்
முத்தி கெடலோ மொழி. (௬௨

பாசுபதம்.

ஆகில மிறைமுன் பணுத்திரள் செய்யுஞ்
சகலாத்து மாக்க டனையா-மலங்க
ளுகிமலம் பூசையா லொப்பாகை முத்தி
யகர்கின்றான் பாசு பதன். (௬௩

சகம தணுவாஞ் சடஞ்செய்யு மாறென்
புகலணுவும் பூதமே யன்றோ-வகமில்
கிரியையாம் பூசை கெழுமலங்கள் போக்கி
விரீயு மிருளா லிருள். (௬௪

வாமம்.

தண்ணிய சட்கச் சமயிக ளெவ்வுருவும்
பெண்ணுருவிற் காணும் பிறப்பதெலா-முண்ணறவே

புத்தியு முத்திப் பொருளுந் தரும்பிணமே
சத்தி யிலாதவெலாந் தான். (௬௫)

மேதினி யொன்றை விளக்குமோ வித்தின்றி
மாது தருகுவ மையற்-பிறப்பன்றே
போத மழிபுலவீர் புத்திக்கு முத்திக்குஞ்
சாதன மானதோர் சாற்று. (௬௬)

பைரவம்.

ஏகமாம் பைரவமெண் டத்துவமா யெண்கலையா
யாகிய ஞாலந்த னர்ச்சனையாற்-போகமா
முத்தரிக்கு நால்வரா னல்வரா யோகத்து
வித்தரிக்கு முண்ணறவால் வீடு. (௬௭)

ஏகத்து வங்கெடுமே யெட்டானன் மற்றவையே
யாகிற் கலைசொல்லா தாயழியும்-போகமுனக்
குள்ளதோ வன்றே தருவா ருக்கருத்தோ
கள்ளதோ நல்குங் கதி. (௬௮)

காளாமுக மாவிரதம்.

வேணியென் பக்குமுதறரித்து மெய்விரதந்
தானு வுரைப்படியிற் றப்பாமற்-பேணிப்
புரைதங்கா தானசிவ லோகம் புகன்மா
விரதங்கா ளாமுகன்றன் வீடு. (௬௯)

தவவேடங் கொண்டவுட றூனழிந்தாற் போமே
புணையோநின் றீடேற்று முன்னைச்-சிவலோக
மெங்குமெனக் காணாதே யோரிடத்தே யேறினார்
சங்கையில் வீழ்வதற்குத் தான். (௭௰)

### சிவாத்துவிதம்.

அனாதி சிவஞ்சகத்து மாருயிரு மாகத்
தனாதுருவைத் தானே பகுத்துத்—தனாலொழியப்
பேறிழ வில்லை பெறுவானு மீவானும்
வேறில தென்றறிகை வீடு. (௭௧)

தானே சகத்தாய்ப் பகரினது தான்சடமாந்
தானே பிறப்பாக்கிற் றானொழிக்கிற்—றானே தன்
திண்ணைக் கலங்கிக் கடவுளா முற்சிவம்போய்
வெண்ணைக் கழுமோ விளம்பு (௭௨)

### வைஷ்ணவம்.

நாராய ணாயதிரு நாமந் தரித்தலா
லாரா தனையா லடிமையெனப்-பேராழி
சேர்யிற் பொறியால்வை குந்தப் பதந்தந்தை
தாயிற் றருஞ்சீ தரன். (௭௩)

மண்ணா விடுநாமம் வாளெரியா லிட்டகுறி
புண்ணா முடம்பொழிந்தாற் போகாதோ-விண்ணாடில்

வைகுந்த மேவு திரு மானுருவங் காணவொரு
மெய்கொண் டிருக்குமதோ வீடு. (எச)

மாயாவாதம்.

அவிகார மேபிரம மாயையினு லாகி
விகார மெல்லா மிறக்கும்-பவமான
வூனதும்பொய் ஞான முதித்ததும்பொ யஞ்ஞானம்
போனதும்பொய் மற்றுமெலாம் பொய். (எரு)

அவிகாரத் தன்மை யவிகாரங் காணி
லவிகாரந் தானல்ல வாகு-மவிகார
மாயை யறியி லவிகார மாயையாய்
வீயும தாரறிவார் வேறு. (எசு)

சௌரவாதம்.

தோற்ற நிலையிறுதி செய்தலாற் றொல்லுலகி
லேற்றவிரு ளெல்லா மிரித்தலாற்-போற்றவருஞ்
சங்கரன்மா லான்முகனுய்த் தற்பரனாய் நிற்கின்றான்
வெங்கதிரோ னல்லதிலை வேறு. (எஎ)

ஈசன் முனிய வெயிறு விழவிழுந்தான்
மாசுணி வாயின் மறைப்புற்றான்-றேசினு
லற்பவமா முள்ளத் திருளொழியா னேருருவன்
றற்பரனு வல்லனே தான். (எஅ)

## சோமவாதம்.

போர்தல் வருதலுளன் பூரணனு மல்லவனை
பாதிநாட் டோன்றான் பகலவன்றான்— சோதியா
லிந்திர சால விருளொழியா தென்னலாற்
சந்திரனே னென்செயலாந் தான். (௭௯)

## ஊழ்வாதம்.

தனுகம் வினையே தரில்வினைதான் செய்ய
முனைக முனிதாய் முடிவு—மனுதியெனி
லெஞ்ஞான்று முத்தி யிலதாகு மிவ்வூழிற்
கஞ்ஞான மாகு மடி. (௮௰)

மந்திர மானதெலாம் வார்த்தையே யவ்வார்த்தை
யந்தர வானின் குணனதுவே—வந்து
பலியா தருள்குருவைப் பாவியா னாகில்
வலிதா னவன்றன் வலி. (௮௧)

## மருத்துவாதம்.

மருந்தா னொருவரிம் மாநி லுலகத்
திருந்தா ரெனக்கண்ட தில்லை—வருந்துவதென்
யார்க்கு மழிவு விளைப்பதாம் யாக்கையெனு
நீர்க்குமிழி பூண்கட்டி நீ. (௮௨)

ஜாதிசங்கற்பம்.

ஆதியே தந்தா னிலாமை யருந்தவர்கள்
சாதியே தஞ்சிறினுஞ் சாற்றுவரோ—சாதிகுல
நல்லார் தொழத்தக்க ஞானமுடையவரே
அல்லா ரிழிகுலத்தா ராம். (௮௩)

தீர்த்தசங்கற்பம்.

அறன்சாரா வுள்ளத் தறியா வழுக்குப்
புறன்சாரு நீராலே போமே—திறன்சாரா
வோடுந்தீர்த் தந்தா னுடற்கே யுளம்விளங்க
வாடுந்தீர்த் தந்தா னறிவு. (௮௪)

அருச்சனா சங்கற்பம்.

சலமுழுகி நீர்தேடிப் பூத்தேடிச் சாணி
நிலமெழுகி யர்ச்சியா நிற்பர்—புலமிலவ
ருள்ளத்தே நின்ற வுலப்பில்பர மானந்த
வெள்ளத்தே நின்று விடாய்த்து. (௮௫)

அத்துவாசங்கற்பம்.

இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க மும்பகர்க
ளந்நெறி யெல்லா மறிந்தவழி—வெந்நெறியா
லெய்தலா மந்த நெறியென் றறைந்தமறை
மெய்தவா வீட்டி னெறி. (௮௬)

சாத்திரசங்கற்பம்.

ஓது முறையின் பொருளுணர்ந் துள்ள படி
போத மறியாப் புலவர்நூ-லோது
மொருகோடி நூறா யிரத்தா னுமுண்மை
யருகூடு போகா ரவர். (அ௯

பிரமாணசங்கற்பம்,

அறியப் படுமளவை கொண்டளவை யெல்லா
மறியக் கடவு வறிவை-யறிய
விருப்புற் றிடுவான் விறகதனைக் கொண்டு
நெருப்புச் சுடுவா னிகர். அ௯

தர்க்கவாதம்.

தர்க்கநெறி வென்றக்காற் றம்ப மிகப்பெருகுந்
துக்க மிகப்பெருகுந் தோற்றக்காற்-றர்க்க
நிலைபெறுவ தொன்றல்ல நெஞ்சகன்றக் கத்துந்
தலைபற்றியே யெய்துபயன் றான். (அ௯

வாதத்தொகுதி.

உரைத்த துரையர் துரைக்குஞ் சமயம்
பரத்தை யறிவுற்ற பான்மை-மரத்தி
னவயவத்தி னேரொன் றறிந்தார் மரமா
மவயவத்தைக் கொண்டவர் றாம். (௯௦

கேடுகண்டிரங்கல்.

கருத்துகட் டீடாய்க் கதிபலவா வீச
னுரைத்ததென் றென்றுணர வொட்டா-புரிந்திங்
கிலதுள தென்னு முளதிலதென்னுங்
கலதியர்க டஞ்சமயக் கத்து. (௬௧)

நன்னெறி.

எய்த வெளிதா மிறையரு ளில்லையே
லெய்த வரிதா மியாவர்க்கு-மெய்தெளிந்தா
லெம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்குமதே
சன்மார்க்க மாகுநெறி தான். (௬௨)

அட்டாங்கயோகம்.

இயமநிய மாதனம் வாயு விசையங்
கமையுறு பிரத்தியா கார-மமையுறு
தாரணை தக்க தியானஞ் சமாதியென
வோரணியும் யோகங்க ளெட்டு. (௬௩)

ஏம முறுமியம மீரைந் திவைதன்னிற்
றூய்மை யருளூண் சுருங்கற்-பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்விப்ப வாற்றுவ
காமங் களவு கொலை. (௬௪)

வாய்மை யெனப்படுவ தியாதெனின் வாய்மையினத்
தீமையி லாதவெனச் செப்புவர்க-டோய்மையிக

